[23rd August 1960

*List of Backward Classes*

* 407 Q.—**Sri V. K. KOTHANDARAMAN :** கனம் பொது மராமத்து அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்வி களுக்குப் பதிலளிப்பாரா—

(அ) பின்தங்கிய வகுப்பினர் ஜாபிதாவைத் திருத்தும் விஷயமாக மத்திய சர்க்கார், நமது ராஜ்ய சர்க்காருக்கு ஏதாவது தாக்கீது அனுப்பியுள்ளார்களா?

(ஆ) அதன் விவரமென்ன ?

(இ) இந்த ராஜ்ய சர்க்காரின் அபிப்பிராயமென்ன ?

THE HON. SRI P. KAKKAN : The attention of the hon. Member is invited to the answer to starred question No. 810 put by Sri P. G. Manickam.

*Spurious drugs*

* 404 Q.—**Sri P. G. MANICKAM :** கனம் ரெவின்யூ அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்கு பதில் அளிப்பாரா—

(அ) சென்னை சர்க்காரால் அமைக்கப்பட்டிருக்கும் போலி மருந்து தடுப்புக் கமிட்டியாரால் எத்தனை போலி மருந்துகள் கண்டுபிடிக்கப்பட்டன?

(ஆ) எத்தனை பேர்கள் மீது நடவடிக்கைகள் எடுக்கப் பட்டன ?

THE HON. SRI M. A. MANICKAVELU : (*a*) The Anti-Spurious Drugs Committee is only an Advisory Committee. The Drugs Control Department detects and takes necessary action in cases of manufacture and sale of spurious drugs.

(*b*) Three cases were detected and the dealers were fined. Three more cases are under investigation.

**SRI P. G. MANICKAM :** போலி மருந்துகள் எவை எவை என்று பொது ஜனங்கள் உணர்ந்துகொள்ளும்படியாக சர்க்கார் விளம்பரம் செய்யுமா ?

**THE HON. SRI M. A. MANICKAVELU :** அப்போதைக்கப்போது கண்காட்சி நடைபெறுகிறது. எது போலி மருந்து, எது நல்ல மருந்து என்பதை எல்லாம் நன்றாகப் படம்போட்டு—பொது ஜனங்களுக்கு எல்லாம் நன்றாகத் தெரியும்படியாக வைக்கிறார்கள்.

**SRI A. VEDARATHNAM :** போலி மருந்துகள் விளம்பரம் செய்யப்படுவதையாவது தடுக்க அரசாங்கம் முன் வருமா?

**THE HON. SRI M. A. MANICKAVELU :** போலி மருந்து என்று யாரும் விளம்பரம் பண்ணுவதில்லை. (சிரிப்பு.) அப்படிப் பண்ணினால் சுலபத்தில் கண்டு பிடித்துவிடலாம். ஆனால் நல்ல